Regd: No. TN-MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE PAYMENT LICENCE NO G 6 - TN - MS (C) P. P 55

**ஆற்றல்**

நம்மிடம் ஆற்றலும் இருக்கிறது. நீண்ட ஆயுளும் இருக்கிறது. நல்ல நம்பிக்கையுடன் நடை போட்டால் அந்த உண்மைப்பாதையில் வெற்றி பெற முடியும்.



-பேரறிஞர் அண்ணா

# அண்ணா



நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**நூல்**

எந்த ஒரு நூலும். அதன் பயனை அளவாகக் கொண்டதே தவிர வேறு எதனாலும் அல்ல.



-தந்தை பெரியார்

மலர்: 9 சென்னை 2-2-1985 சனி ★ ★ ★ வெளியூர் 3-2-1985 ஞாயிறு இதழ் 106

## ப. உ. ச. கடிதம்

டாக்டர் நாவலர் தலைமையில்

நாளை (3-ந் தேதி) மவுன ஊர்வலம்:

## அண்ணாவிற்கு அஞ்சலி செலுத்திட வாரீர்...

பேரன்புடையீர்,

நாளை (3-2-85) காலை எட்டு மணிக்கு பேரறிஞர் அண்ணா அவர்களின் பதினாறாவது ஆண்டு நினைவு நாள்! மாண்புமிகு டாக்டர் நாவலர் அவர்கள் தலைமையில் வழக்கம் போல் அறிஞர் அண்ணா சிலை அருகிலிருந்து மவுன ஊர்வலம் புறப்படும்.

ஏழைகள் இதயத்தில் இடம் பெறுவதையே தன் வாழ்வின் இலட்சியமாகக் கருதி இறுதி மூச்சு வரை ஏழைகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த சிந்தித்துச் செயலாற்றி வந்த பேரறிஞர் பெருந்தகை உறங்கும் இடம் சென்று வணங்கிட நீங்கள் தவறமாட்டீர்கள் என்று நம்புகிறேன்!

**நமது அறிவுக் கண்களைத் திறந்து தன் கண்களை மூடிவிட்ட அவர் நம் நினைவில் என்றென்றும் உள்ளார். என்றாலும் பிப்ரவரி 3-ந் தேதி வந்ததும் நம்மையும் அறியாது கண்கள் கலங்கிடுகின்றன. காரணம் குடும்ப பாசத்தோடு நம்மை வளர்த்தார்!**

**தோற்றம் எளிமையானது!**

(2-ம் பக்கம் பார்க்க)

### ஃ தமிழகமே எதிர்பார்த்து நிற்கும் தங்கத்தலைவர் புரட்சித்தலைவரை அனைவரும் பார்க்க

# சிறப்புஏற்பாடுகள்

## விசேஷ தொலைக்காட்சிப் பெட்டிகளும் அமைப்பு

**சென்னை, பிப். 2- நாலரைக் கோடி தமிழக மக்களின் நாயகன் - ஏழைகளின் இதய வேந்தன் புரட்சித்தலைவரை பிப்ரவரி 4-ந் தேதி காலை அனைவரும் பார்க்க சிறப்புமிகு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. விசேஷ தொலைக் காட்சிப் பெட்டிகளும் அமைக்கப்படுகின்றன.**

### புரட்சித் தலைவருக்கு விமானத்தில் விசேஷ இருக்கை

புதுடெல்லி, பிப். 2 முதல்வர் புரட்சித் தலைவர், நியூயார்க்கிலிருந்து இந்தியாவுக்கு வர ஏர் இந்திய விமானத்தில் தனிஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. முதல் வகுப்பில் 4 சீட்டுகள் அகற்றப்பட்டு படுக்கவும், உட்கார்ந்து வரவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

அமெரிக்காவில் சிகிச்சை பெற்று பூரண குணம் அடைந்துள்ள புரட்சித் தலைவர் நியூயார்க் நகரிலிருந்து இந்திய நேரப்படி நாளை (ஞாயிற்றுக் கிழமை) காலை 6-15 மணிக்கு (அமெரிக்கநேரம் சனிக்கிழமை இரவு 8-15 மணி: நியூயார்க்கிலிருந்து "ஏர் இந்தியா விமானம் மூலம் இந்தியாவுக்கு புறப்படுகிறார்.

திங்கட்கிழமை காலை 6 மணிக்குபுரட்சித்தலைவர் சென்னை வந்து சேருகிறார்.

பரங்கிமலை ராணுவ மைதானத்தில் புரட்சித் தலைவருக்கு பிரமாண்டமான வரவேற்புஅளிக்கப் படுகிறது.

### சிறப்பு மேடை

புரட்சித் தலைவருக்காக இந்த மைதானத்தில் சிறப்பானமேடை அமைக்கப்படுகிறது. மேடையின் உயரம் 10 அடி, நீளம்-அகலம் 20அடி.

வேனில் மேடைக்கு புரட்சித்தலைவர் வரத் தக்க அளவுக்கு ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

வேனில் இருந்து இறங்கி மேடையில் நின்றும், சோபாவில் அமர்ந்தும் புரட்சித்தலைவர் பொதுமக்கள்வரவேற்பை ஏற்பார்.

புரட்சிதலைவர்மீதான அன்பு மிகுதியால் யாரும் நெருங்கி தொந்தரவு கொடுக்காமல் இருக்க, மேடை முன் 75 அடி தூரத்துக்கு பாதுகாப்பு வளையம் அமைக்கப்பட்டுள்ளது.

### பெண்களுக்கு தனியிடம்

புரட்சித்தலைவரை அனைவரும் வசதியாகப் பார்க்கத் தக்க வகையில் திடலில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆண்களுக்குத் தனி இடமும் பெணகளுக்குத் தனி இடமும் அமைக்கப் படுகிறது.

### டி. வி. செட்

புரட்சித்தலைவரை வசதியாகப் பார்க்க, தொலைக்காட்சிப்பெட்டிகளும்வைக்கப்படுகின்றன.

4ந்தேதியன்று புரட்சித் தலைவரை வரவேற்க ஏராளமான வாகனங்கள் வரஇருப்பதால், பரங்கிமலை கத்திப்பாரா சந்திப்பில் இருந்து, மீனம்பாக்கம் செல்லும் ரோட்டில்3ந் தேதி இரவு 10-30 மணியிலிருந்து காலை 9 மணிவரை அனுமதி பெற்ற வாகனங்கள் மட்டுமேசெல்லலாம்என்று அறிவிக்கப்பட்டுள்ளது. திங்கள்காலை9 மணிவரை மற்றபகுதிகளிலும்வாகன போக்குவரத்தில் மாறுதல் செய்யப்பட்டுள்ளது.

### மருத்துவர்கட்கு புரட்சித்தலைவர் நன்றி

நியூயார்க், பிப். 2. முதல்வர் புரட்சித் தலைவர் தாயகம் திரும்புவதையொட்டி புரூக்ளின் மருத்துவமனை டாக்டர்கள், நர்சுகள் ஆகியோருக்கு நன்றி தெரிவித்தார். மருத்துவ நிபுணர்கள் ஒவ்வொருவரையும் சந்தித்து கை குலுக்கி நன்றி கூறினார்.

**புரட்சித்தலைவர் வாழ்த்து**

### இந்தியாவின் கவுரவத்தை இமயமென உயர்த்திய அசாருதீன்

நியூயார்க், பிப். 2— புரூக்ளின் மருத்துவ மனையிலிருந்து முதல்வர் புரட்சித்தலைவர், கிரிக்கெட் விளையாட்டு வீரர் முகமது அசாருதீனுக்கு பாராட்டுத்தந்தி ஒன்றை அனுப்பியுள்ளார்.

அந்த பாராட்டு தந்தி விவரம் வருமாறு:-

தொடர்ந்து 3 டெஸ்ட் போட்டிகளில் சதம் போட்டு தாங்கள் சாதனை புரிந்திருப்பதை அறிந்து மகிழ்கிறேன்.

ஆஸ்திரேலியா வீரர்கள் பில்பாம் போர்ட், டக் வால்டர்ஸ். மேற்கிந்திய தீவைச் சேர்ந்த காளிச்சரண் ஆகியோரின் சாதனைகளை முறியடித்து புதிய சாதனை புரிந்துள்ளீர்கள்.

இதன் மூலம் இந்தியாவின் கவுரவத்தைஇமயமலை அளவுக்கு உயர்த்தி இருக்கிறீர்கள்.

கிரிக்கெட் உலகத்திற்கும் இளம் கிரிக்கெட் வீரர்களுக்கும் பெருமை தேடித் தந்துள்ளீர்கள். உங்களது சாதனைக்காக உங்களுக்கு வாழ்த்து தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

இவ்வாறு புரட்சித் தலைவர் அந்தவாழ்த்துத் தந்தியில் கூறியுள்ளார்.

**பொதுச் செயலாளர் ப. உ. ச. முக்கிய அறிவிப்பு**

2- ஆம் பக்கம்

### ஓ... பிப்ரவரி 3...!

எல்லாச் சபையிலும் நாம் சரியாசனம் பெறச் செய்து நம்மை ஆளாக்கி அரியாசனத்தில் அமர்த்திய அண்ணனுக்கு அஞ்சலி செலுத்திட அமைதிப் பேரணிக்கு அலை அலையாய் வருக!

**அண்ணாசாலை, அண்ணாசிலை அருகே அதிகாலைப் பொழுதில் அமைதிப் பேரணிக்கு அணி சேர்வீர்.**

நாவலர் தலைமையில் 8 மணிக்கு அண்ணா நினைவாலயம் நோக்கி அமைதிப் பேரணி

அலை அலையாய், அணி அணியாய் வருக! வருக!!



அமெரிக்காவில் இருந்து தாயகம் (தி)ரும்பும் முதல்வா புரட்சித்தலைவருக்கு நியூயார்க் நகரில் உள்ள தமிழர்கள் வரவேற்பு அளித்தார்கள் அந்த நிகழ்ச்சி 'வீடியோ' படமாக எடுக்கப்பட்டுள்ளது. அதிலிருந்து இப்படம் எடுக்கப்பட்டது.

**விஞ்ஞானயுகத்தின் விந்தை:**

### கன்னிமாரா நூலகத்தின் சீரிய பணி

சென்னை, பிப். 2- கன்னிமாரா பொது நூலகத்தில் மின்சக்தியால் இயங்கும் நகல் எடுக்கும் கருவி ஒன்று நிறுவப்பட்டுள்ளது.

நேற்று (1ந்தேதி) இந்த நகல் எடுக்கும்கருவி நிறுவப்பட்டுள்ளது.

மாணவர்கள், ஆராய்ச்சியாளர் ஆகியோருக்கு உதவிடும் வகையில் இக் கருவி நிறுவப்பட்டது.

நகல் எடுக்கும் முதல் பிரதிக்கு 75 காசு வீதமும் தொடர் பிரதி ஒவ்வொன்றுக்கும் 50 காசு வீதமும் குறைந்த கட்டணம் வசூலிக்கப்படுகிறது.

கன்னிமாரா பொது நூலகத்தில் உள்ள நூல்கள், நாள், வார, மாத இதழ்களிலிருந்து மட்டும் பிரதிகள்எடுத்துக் கொள்ள எல்லா வேலை நாட்களிலும் அனுமதிக்கப்படுகிறார்கள்.

இந்த சீரிய பணியினால் நூலகத்தில் உள்ள புத்தகம் மற்றும் இதழ்களில் பாழ்படுத்தும், கிழிக்கும் தவறுகள் தவிர்க்கப்படும்.

இந்த வசதிகளை பொதுமக்கள் பயன் படுத்திக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

★★

### இலங்கையில் பத்திரிகை தணிக்கை

கொழும்பு. பிப். 2— இலங்கைத்தமிழர்கள் மீது சிங்கள ராணுவத்தினர் மேற்கொள்ளும் நடவடிக்கைகளை பத்திரிகைகள் வெளியிட இலங்கை அரசு தடை விதித்துள்ளது.

இதற்காக பத்திரிகை தணிக்கையை இலங்கை அரசு அமுல்படுத்தியுள்ளது.

★★

### தோட்டக்கலை கண்காட்சி துவக்கம்

சென்னை, பிப். 2— சென்னைத் தீவுத்திடலில் நடைபெற்றுவரும் சுற்றுலா பொருட்காட்சியில். தோட்டக்கலை கண்காட்சியை இன்று மாலை வேளாண்மை செயலாளர் அ. வெங்கட்ராமன் திறந்து வைக்கிறார்.

சென்னை நகரில் சிறந்த வீட்டுத் தோட்ட பராமரிப்பிற்கான முதல்பரிசு, அமைச்சர் காளிமுத்துவின் துணைவியார் நிர்மலாவிற்குகிடைத்துள்ளது.

இது தவிர சிறந்த முறையில்தோட்டங்களையும், பல்வேறு வகையான பூச்செடிகளையும் பராமரித்தவர்களுக்கு பரிசுகள் அறிவிக்கப்பட்டுள்ளன,

இன்றும் நாளையும் இக்கண்காட்சி நடைபெறுகிறது.

# புண்ணிய நதியே வருக!

**புண்ணிய நதியே - உன் வசந்த வரவை வேண்டி நாங்கள் நடத்திய வேள்விகள் இன்று பலனைக் கொடுத்திருக்கின்றன. நாங்கள் பாக்கியவான்கள்.**

**அன்று - தத்தளித்துக் கொண்டு எங்கோ திசை தெரியாது சென்று கொண்டிருந்த தமிழகத்திற்கு நீ தான் நன்னம்பிக்கை முனையாய் அமைந்தாய்.**

ஆம் - 1972 ல் நீ அண்ணா தி.மு.கழகம் என்ற அரசியல் கட்சியை... இல்லை... பாசமிக்க ஒரு குடும்பத்தை அமைத்தது சரித்திரக் கட்டாயம் மட்டுமல்ல - அது தெய்வ கட்டளையும் கூட!.

தர்மத்தை நிலைநாட்டி தமிழகத்தில் ராமராஜ்யம் மலர இறைவன் உனக்கு இட்ட கட்டளை அது.

எங்களுக்காக ராஜ்யபாரத்தை மட்டும் சுமந்துகொண்டிருந்த நீ, சென்ற அக்டோபர் ஐந்தாம் நாள் நோயையும் சுமந்துகொண்ட செய்தி கேட்டுத்தமிழகமே சோகத்தைச் சுமந்து நின்றது.

**இம்முறையும் தர்மதேவதை உன் உயிரை - தமிழகத்தின் ஆன்மாவைக் காப்பாற்றியிருக்கிறாள். அவளை இந்நாளில் வணங்குகின்றோம்.**

அன்று சிகாகோவில் சிம்மகர்ஜனை செய்து அமெரிக்காவை கவர்ந்தார் விவேகானந்தர். நீயோ அதே மண்ணில் மௌனியாய் இருந்துகொண்டே சாதனை செய்து உலகத்தையே கவர்ந்திருக்கிறாய்

**எங்கள் தேவனே! நீ காட்டுகின்ற சத்திய வழியில் நாங்கள் பயணத்தைத் தொடர்கிறோம். எங்களுடைய எல்லா ஜென்மங்களிலும் நாங்கள் விசுவாசமிக்க உன் குடிமகனாக இருக்க உன்னை இந்நாளில் வேண்டுகின்றோம். ஆசீர்வதியுங்கள்!**

- மதுரை ஜெயந்தி

# புரட்சித்தலைவர் சார்பில் மருத்துவக் கல்லூரிக்கு நன்கொடை அளிப்பு

## அமைச்சர் ஆர். எம். வீ. அறிவிப்பு

**சென்னை, பிப். 2- சென்னை மருத்துவக் கல்லூரிக்கு புரட்சித்தலைவர் சார்பில் நன்கொடை வழங்கப்படுமென அமைச்சர் ஆர். எம். வீ. அறிவித்தார்.**

சென்னை மருத்துவக் கல்லூரி 150 வது ஆண்டு நிறைவு விழாவையொட்டி, நடைபெறும் தொடக்க விழா நிகழ்ச்சியில் பங்கேற்று அமைச்சர் ஆர். எம். வீ. பேசுகையில் கூறியதாவது:-

இந்தியாவின் மருத்துவத்துறை வரலாற்றில் சிறந்த அத்தியாயத்தை பெற்றுள்ள சென்னை மருத்துவக் கல்லூரியின் 150 வது ஆண்டுவிழாவில் கலந்து கொள்வதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இந்தக் கல்லூரிக்கென்று சிறந்த வரலாறு உண்டு.

### முதற்பெண் டாக்டர்

இந்தியாவிலேயே முதன் முதலாக பெண் டாக்டராக தமிழகத்தைச் சேர்ந்த முத்துலட்சுமி ரெட்டி என்ற பெண்மணியை கல்வி பயின்று பட்டம் பெற வைத்தது இந்தக் கல்லூரி.

புரட்சித்தலைவர் இங்கிருந்திருந்தால் இந்த விழாவில் பங்கேற்றிருப்பார். கடந்த 4 நாட்களுக்கு முன்பு நியூயார்க் நகரில் அவர் சிகிச்சைப் பெற்ற மருத்துவமனைக்கு புரட்சித்தலைவர் 3 லட்ச ரூபாய் நன்கொடை வழங்கி அறக்கட்டளை அமைத்துள்ளார் இது போல் இந்த மருத்துவக் கல்லூரி மருத்துவமனைக்கும் அவர் முன்பு 1லட்சம் ரூபாய் கொடுத்துள்ளார்.

புரட்சித்தலைவர் வரும் 4ந் தேதி சென்னை வருகிறார். இந்த மருத்துவக் கல்லூரியின் 150-வது ஆண்டு நிறைவு விழா வருகிற 7-ந் தேதி நடக்கிறது. அந்த நிறைவுவிழாவில்புரட்சித் தலைவர் சார்பில் நன்கொடையாக ஒரு தொகை அளிக்கப்படும்.

### நிரந்தர கண்காட்சி

இங்கு ஆண்டு தோறும் நடைபெறும் கண்காட்சியை நிரந்தரகண்காட்சியாக மாற்ற இந்தக் கல்லூரியின் தலைவர் முயற்சிக்கவேண்டும்.

50 லட்சம் பேர் பார்க்கின்ற ஒரு பொருட்காட்சியான தீவுத்திடலில் நடக்கும் பொருட்காட்சியில் மருத்துவத்துறை சார்பில் இதை அமைத்தால் நாட்டுமக்கள் பலன் அடையவாய்ப்புஏற்படும். அந்தக் கண்காட்சியில் மருத்துவர்கள் நோயைக் குணப்படுத்துவது பற்றி மட்டுமல்ல, நோய் வராமல் தடுக்கஅறிவுரைகூறுவதையும்இடம்பெறச்செய்தால் நல்ல பலன் கிடைக்கும்.

தீவுத்திடலில் அரசு நிரந்தர பொருட்காட்சியை அமைக்கும் போது இந்த முறையில் ஒரு மருத்துவ கண்காட்சியும் அங்கு இடம் பெற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

### தாய்மொழி கல்வி

பல வெளி நாடுகளில் மருத்துவத்தை தாய் மொழியிலேயே கற்கிறார்கள். இங்கும் தாய்மொழி தமிழில் மருத்துவத்தை பயிற்றுவித்தால் தான் கல்வியின் தரம் உயரும்.

சித்த மருத்துவத்தைப் பொறுத்த வரையில் உங்கள்பயிற்சியில்ஒருபகுதியாக வைத்தால் தான் அதனை வளர்க்க முடியும். ஆனால் அதை தனியாக வைத்துள்ளோம்.

படித்தவன், படிக்காதவன் என்பது ஜாதி பேதம் போல் தலை தூக்கி விட்டது மருத்துவத்தில் அது வருவது சிறப்பைத்தராது.

இந்தக் கல்லூரியின் 150 வது நிறைவு ஆண்டிலிருந்து சித்த வைத்தியத்தையும் சேர்த்துப் படிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். தாய் மொழியில் படிப்பதால் நமது தாய் நாட்டு மருத்துவ முறை வளரவும் பயன்படும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ.பேசினார்.

# ப. உ. ச. கடிதம்...

(முதற் பக்கத் தொடர்ச்சி)

**ஆனால் அவர் ஆற்றல் வலுவானது!**

**அவர் பேசியதனைத்தும் அமுத வாக்கு! அவற்றுக்கு என்றும் உண்டு தனி செல்வாக்கு!**

முக்கனிச்சாறு பிழிந்து சர்க்கரையோடு அமுதுகலந்து காய்ச்சி பாகெடுத்தால் சுவைக்கும்! ஆனால் திகட்டும். பேரறிஞர் அண்ணா அவர்கள் முத்தமிழைப் பிழிந்து தருவார்! பாகைவிட இதுஇனிக்கும். ஆனால் திகட்டாது!

**அண்ணா! வீரத்தோடு வாழ்ந்தார்! விவேகத்தோடு பேசினார்! தைரியத்தோடு சாவை சந்தித்தார்!**

ஏழைகளின் தலைவன்!

ஏழ்மையின் பகைவன்!

அன்பிற்கு இலக்கணம்!

பண்பிற்கு விளக்கம்!

இவர்தான் அண்ணா!

அவர் உறங்கும் இடம் சென்று வணங்க அழைக்கிறேன்.

அன்புள்ள

ப. உ. ச.

## 76-வது வட்டக் கழக ஆலோசனைக் கூட்டம்

சென்னை, பிப். 2— சென்னை 76வது வட்டக் கழக ஆலோசனைக் கூட்டம் நேற்று (1ந் தேதி) மாலை 6.15மணிக்கு விருகம்பாக்கம் வன்னியர் தெருவில் உள்ள அண்ணா தொழிற்சங்க கட்டிடத்தில் நடைபெற்றது.

கழக பிரதிநிதிகள், மன்ற செயலாளர்கள், வட்டச் செயலாளர் அ. பாண்டியன் ஆகியோர் இக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

## திருமணம்

சென்னை, பிப். 2- திருவண்ணாமலைவட்டம் வேட்டவலம் திருவள்ளுவர் தெருவைச் சேர்ந்த பொன்னுசாமியின் மகன் கணேசனுக்கும், கிழக்குத் தாம்பரம் சிட்டலபாக்கம் அய்யப்பநகரைச் சேர்ந்த வைத்திலிங்கத்தின் மகள் மணிமேகலைக்கும்நேற்று (1-2-85) குரோம்பேட்டை ஜி. எஸ். டி. ரோடு சி. எம். பேலஸ் திருமண மண்டபத்தில் திருமணம்நடைபெற்றது.

உறவினர்களும் நண்பர்களும் திரளாகவந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

## செங்கை மாவட்ட செயலாளர் ஜே. சி. டி. பிரபாகரன் வேண்டுகோள்

சென்னை, பிப். 2- செங்கை மாவட்டக் கழக செயலாளர் ஜே. சி. டி. பிரபாகரன் விடுத்துள்ள வேண்டுகோள் வருமாறு:-

வருகிற 4-ந் தேதி காலை சென்னை வரும் இதய தெய்வம் புரட்சித் தலைவர் அவர்களை வரவேற்றிட செங்கை மாவட்டமே திரண்டுவருவது போல கழகத் தோழர்கள் திரண்டுவர வேண்டுகிறேன்.

மேலும் புரட்சித்தலைவர் உடல் நலம் பற்றி கேலிபேசிய தி. மு. க. வினரும் அவரை தரிசிக்க தனிவாகனம்ஏற்பாடுசெய்யப்படும்.

இவ்வாறு ஜே. சி. டி. பிரபாகரன் தெரிவித்துள்ளார்.

## ஈரோட்டில் நன்றிஅறிவிப்புப் பொதுக்கூட்டம்

ஈரோடு, பிப். 2- ஈரோடு குப்பக்காடு அண்ணா திடலில் இன்று மாலை 7 மணிக்கு நன்றி அறிவிப்புப் பொதுக் கூட்டம் ஜி. மாணிக்கம் தலைமையில் நடைபெறுகிறது.

கூட்டத்தில் நெல்லை பாலாஜி எம். எல். சி. ஈரோடு அழகரசன், சாய்பாபா, ராதாகிருஷ்ணன், ஞானசேகரன், ஆறுமுகம் கே,எஸ். தென்னரசு சண்முகம், இரா.முத்து, கோதண்டபாணி மற்றும் பலர் பேசுகின்றனர்.

## தலைமைக் கழக முக்கிய அறிவிப்பு

பொதுத்தேர்தலில் எதிரணிக்கு வேலை செய்தார்கள் என்று குற்றம் சாட்டப்பட்டு கழகத்திலிருந்து நீக்கிவைக்கப்பட்டுள்ளவர்கள் தாங்கள் அத்தகைய குற்றம் செய்யவில்லையென்று மறுக்கிறார்கள்

இது குறித்து விசாரிக்க விரைவில் குழு ஒன்று அமைக்கப்படும்.

பாதிக்கப்பட்டவர்கள் அந்தக் குழுவிடம் முறையிடலாம். விசாரணையின் பரிந்துரையின் பேரில் இறுதி முடிவு எடுக்கப்படும்.

-ப. உ. சண்முகம்
சென்னை-14 பொதுச் செயலாளர்,
2-2-85 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்.

# புரட்சித்தலைவர் வருகையையொட்டி அன்னதானம்

**சென்னை, பிப்.2- மூன்றாம் பிறப்பெடுத்து முழுமதியாய் புரட்சித்தலைவர் தாயகம் திரும்புகையில் கழகத் தோழர்கள் ஏழைகளுக்கு அன்னதானம், இனிப்பு வழங்கி அந்நாளை மகிழ்ச்சித் திருநாளாக கொண்டாடுகின்றனர்.**

நன்மனங்களின்பிரார்த்தனைகளால் பூரண நலம் பெற்று முழுமதியாய் முதல்வர் புரட்சித் தலைவர் வரும் 4-ந் தேதி தாயகம் திரும்புகிறார். அன்று கழகத் தோழர்கள் பல்வேறு இடங்களில் ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கி தங்கத் தலைவர் தாயகம் திரும்பும் அந்நாளை மகிழ்ச்சித் திருநாளாக கொண்டாடுகின்றனர்.

### துறைமுகம்

துறைமுகப்பகுதி 51வது வட்டம் போஸ்டாபீஸ் தெருவில் முதல்வர் வருகையையொட்டி 4-ந் தேதி காலை 11 மணிக்கு ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

இந் நிகழ்ச்சியில் பீர்முகமது, எம். எஸ். மணி, யுவராஜ், எஸ். எஸ். ராஜேந்திரன், பாஸ்கர், நமச்சிவாயம் உள்ளிட்ட கழகத் தோழர்களும் பங்கேற்கின்றனர்.

ஏழைகளுக்கு அக்ரோ தலைவர் லியாகத் அலிகானும், முன்னாள் எம். எல். ஏ. வெள்ளைச்சாமியும் உணவு வழங்குகின்றனர்.

புரட்சித்தலைவர் தமிழகம் திரும்பும் நாளன்று 53-வது வட்ட கழக சார்பில் ஏழைகளுக்கு உணவு வழங்கப்படுகிறது.

ஜேப்பியார் எம்.எல்.சி நிகழ்ச்சியில் பங்கேற்று ஏழைகளுக்கு உணவு வழங்குகிறார். எல்லப்பன் உள்ளிட்ட பலர் பங்கேற்கின்றனர்.

## பாகிஸ்தான் உளவாளிகள் 4 பேர் கைது

அகர்தாலா, பிப். 2- அகர்தாலாவில் 4 பாகிஸ்தானியர்கள் கைது செய்யப்பட்டனர். போலீசார் அவர்களைப் பிடித்து விசாரித்தபோது அவர்கள் சொன்ன தகவல் முன்னுக்குப்பின் முரணாக இருந்ததைத் தொடர்ந்து அவர்கள் பாகிஸ்தான் உளவாளிகளாக இருக்கக்கூடும் என்று கருதி போலீசார் கைதுசெய்து மேலும் விசாரித்து வருகிறார்கள்.

# 'புரட்சித்தலைவரை தரிசிக்க 4-ந் தேதி அனைவரும் வாரீர்'

## எம். ஜி. ஆர். மன்றத் தோழர்களுக்கு முசிறிப்புத்தன் வேண்டுகோள்

**சென்னை, பிப். 2-முதல்வர் புரட்சித்தலைவரை தரிசிக்க 4ந்தேதி காலை 5-30 மணிக்கு எம்.ஜி. ஆர். மன்றத் தோழர்கள் அனைவரும் பரங்கி மலை விமானபடை திடலுக்கு வருமாறு முசிறிப்புத்தன் எம். எல். ஏ, கேட்டுக் கொண்டுள்ளார்.**

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர், முசிறிப்புத்தன் எம். எல். ஏ. விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

பொன்மனச் செம்மல் முதல்வர் புரட்சித் தலைவர் 4ந்தேதி தமிழகம் வருகிறார் என்பது நமது நெஞ்சமெல்லாம் பால் வார்க்கிற நற்செய்தியாகும்.

தாயைப் பிரிந்திருந்தது போல ஏக்கத்தில் வாடிக் கிடந்த நமது நெஞ்சங்களில் மகிழ்ச்சி ஏற்படப்போகிறது.

மகத்தான மக்கள் தலைவரை வரவேற்க சென்னை பரங்கிமலை ராணுவ திடலுக்கு, மன்ற அடலேறுகள் அனைவரும் அவசியம் வர வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்,

புரட்சித் தலைவருக்கு நாம் தரும் வரவேற்பு சரித்திரச் சாதனையாக அமைய வேண்டும்.

வரலாற்று முத்திரையாக அமையவேண்டும்.

ஆகவே நமது இதய தெய்வமாம் முதல்வர் புரட்சித்தலைவரை வரவேற்க நாம் கூடுவோம்.

இவ்வாறு முசிறிப்புத்தன் கேட்டுக் கொண்டுள்ளார்.

## கழகக் கொடி ஏற்று விழா

கோவை, பிப். 2- கோவை, நீலகிரி மாவட்ட அண்ணா பொதுத் தொழிலாளர் சங்க சார்பில் கழகக் கொடி ஏற்றுவிழா உதகைப்படகு இல்ல மைதானத்தில் நடைபெற்றது.

க சு. மருதாசலம் கழக கொடியை ஏற்றுவிக்க துரைசாமி தொழிற்சங்க கொடியை ஏற்றினார். உதகை வண்ணவன், குபேந்திரன், அமுல்ராஜ், சத்தியமங்கலம்உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

## துணை ஜனாதிபதி ஆர். வி. ஆந்திரா வருகை

ஹைதராபாத் பிப். 2- ஆந்திர மாநிலத்தில் இரண்டு நாட்கள் சுற்றுப் பயணத்திற்காக துணை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் இன்று காலை ஹைதராபாத் வந்தார்.

விமான நிலையத்தில் வெங்கட்ராமனை, ஆந்திர மாநில கவர்னர் சர்மா, முதல்வர் என். டி. ராமராவ் மற்றும் அவரது அமைச்சரவை சகாக்கள் வரவேற்றனர்,

# திருப்பூர் மணிமாறன் தந்தை மறைவு: நாவலர் - ப. உ. ச. இரங்கல்

திருப்பூர், பிப். 2- திருப்பூர் மணிமாறனின் தந்தையார் ராமகிருஷ்ணன் நேற்றிரவு காலமானார்.

கழக முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திருப்பூர் மணிமாறனின் தந்தை பி. வி. ராமகிருஷ்ணன் நேற்றிரவு கோவையில் இயற்கை எய்தினார்.

அன்னாரது உடல் திருப்பூருக்கு கொண்டு வரப்பட்டது. ராமகிருஷ்ணனுக்கு 60 வயதாகிறது. தந்தையின் மரணச் செய்தி கேட்டதும் சென்னையில் இருந்த திருப்பூர் மணிமாறன் திருப்பூருக்கு விரைந்தார்.

ராமகிருஷ்ணனின் மறைவுச்செய்தி அறிந்து ஏராளமான கழகத் தோழர்கள் அவரது இல்லம் சென்று அஞ்சலி செலுத்தினர்.

ராமகிருஷ்ணனின் மறைவுக்கு இரங்கல் தெரிவித்து நிதியமைச்சர் நாவலர், பொதுச்செயலாளர் ப. உ. ச., பொருளாளர் மாதவன் மற்றும் கழக முன்னணியினர் இரங்கல் தந்தி அனுப்பியுள்ளனர்.

★ புரட்சித்தலைவருக்குத் தெரியாமல் ஓரணுகூட ஆட்சியிலோ - கட்சியிலோ அசையாது - அசைய முடியாது.

★ ஆழ்வார் கோபுர கழுகுகள் கருடனாக முடியாது

★ கோபுரகலசத்திற்குத்தான் புனிதநீர் கும்பாபிஷேகம் - வந்துபோகும் பொம்மைகளுக்கல்ல

★ காகித ஓடங்களின் பத்திரிகை ஜிலுஜிலுப்புக்கள் பட்டுப்போகும்

★ இராமபிரானைக் கவர நவீன சூர்ப்பனகை செய்யும் முயற்சி அடக்கப்படும்!

# புரட்சித்தலைவர் தாயகம் திரும்பிய பின்

# துரோகிகள் தூக்கி எறியப்படுவர்

## பொதுச் செயலாளர் ப. உ. ச. திட்டவட்ட அறிவிப்பு

வேலூர், பிப். 2- பாதுகாப்பு இல்லாத பழத்தோட்டமல்ல கழகம். கழுகுகள் கருடனாக முடியாது. பொம்மைகள் கோபுரமாக முடியாது. புரட்சித்தலைவரைப் பற்றிச் சொல்லத் தகாதவற்றையெல்லாம் கட்சியில் இருந்துகொண்டே சொல்லி பத்திரிகைகளுக்குப் பரபரப்புத் தீனி கொடுக்கும் துரோகிகள் விரைவில் கட்சியை விட்டுத் தூக்கியெறியப்படுவார்கள் என்று பொதுச் செயலாளர் ப. உ. ச. ஆவேசமாகக் கூறினார்.

சூர்ப்பனகைகளுக்குப் பட்டாபிஷேகம் செய்து பார்க்கத் துடிப்போர் வெற்றி பெறப் போவதில்லை. இராமாயண சூர்ப்பனகையின் ஆசை அவளது அழிவில் முடிந்தது அதுதான் இப்போதும் நடக்கும் என்று இலக்கிய நயம் சொட்டச் சொட்டப் பேசினார் ப. உ. ச.

வடாற்காடு மாவட்டம் ஆரணியில் நடந்த கழகப் கூட்டத்தில் பங்கேற்று கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. பேசுகையில் கூறியதாவது:-

கழகம் கட்டுக்கோப்பான கட்சி. அந்தக் கட்சியின் மீது சிலர் உரிமை கொண்டாட நினைக்கிறார்கள். அது நடக்காது.

### காலம் பதில் சொல்லும்

கழகம் பாதுகாப்பு இல்லாத பழத் தோட்டம் அல்ல. தப்புக் கணக்கு போடுபவர்கள் திருத்திக் கொள்ள வேண்டும். இல்லையேல் காலம் பதில் சொல்லும்.

புரட்சித் தலைவரைப் பற்றி சொல்லத்தகாதவற்றையெல்லாம் கட்சியில் உள்ள சிலர் சொல்கிறார்கள். அவர்கள் விரைவில் கட்சியை விட்டு தூக்கி எறியப்படுவார்கள்.

நாவலரும், நானும், புரட்சித் தலைவரின் துணைவியாரும், அமைச்சர்ஆர்.எம்.வீ.யும் சேர்ந்துஎல்லாவற்றையும் செய்வதாக சிலர் கூறுகிறார்கள். புரட்சித் தலைவருக்குத் தெரியாமல் எதுவும் நடக்கவில்லை. அவருக்குத் தெரியாமல் அணுவும் அசையாது.

நாடாளுமன்ற (மக்கள் சபை) கழகத் தலைவராகக் குழந்தைவேலுவையும், துணை சபாநாயகராக தம்பித்துரையையும் தேர்வு செய்து 'டிக்' செய்து அனுப்பியது புரட்சித் தலைவர்தான்.

### கழுகு கருடனாக முடியுமா?

புரட்சித்தலைவரையும், அன்னை இந்திராவின் தியாகத்தையும்பார்த்துத் தான் மக்கள் நம்மை ஆதரித்தார்கள் வந்துபோகிற அழகுக்காக அல்ல. ஆள்வார் கோபுரத்தில் கழுகு வந்து உட்காருவதால் அதை கருடன் என எண்ணி யாரும் வணங்குவதில்லை.

### பொம்மையே கேள்

கும்பாபிஷேகத்தில் கோபுர கலசத்தில்தான் புனிதநீர்ஊற்றுவார்கள். கீழே உள்ள பொம்மைகளுக்கு அல்ல. புனித நீரை தனக்குத்தான் ஊற்றுவதாக பொம்மை நினைத்தால் அது பைத்தியக்காரத்தனம்.

40ஆண்டுகளாக அரசியலில் இருப்பவன் நான். கால் நூற்றாண்டுக்கு மேல் புரட்சித்தலைவருடன் எனக்கு நட்புஉண்டு. ஆனால் நான் கட்சி மீது உரிமை கொண்டாடவில்லை. கட்சிக்காக உழைத்துக்கொண்டு இருக்கிறேன்.

ஆனால் 3 ஆண்டு அரசியலை நடத்திவிட்டு கட்சிமீது உரிமை கொண்டாடுகிறார்கள். பரபரப்பு பேட்டி கொடுத்து விளம்பரம் தேடுகிறார்கள். இது காகித ஓடம். ஆற்றோ போய்விடும்.

### விளம்பர வெறியின் பலிகடா

பத்திரிகை விளம்பரம் மூலம்மட்டுமே அரசியலில் முன்னேறிவிட முடியாது. பத்திரிகைகளுக்கு தீனி போட்டு எதிர்க்கட்சிகளை வளர்த்து விடாதீர்கள் என்று கேட்டுக்கொண்டேன். ஆனால் தீனி போட்டார்கள். பலன் சென்னையில் 3 தொகுதிகளைப் பறிகொடுத்தோம்.

புரட்சித் தலைவரின் துணைவியார் யார் என்றுகூட சிலர் சந்தேகத்தைக் கிளப்பி இருக்கிறார்கள். புரட்சித் தலைவரின் துணைவியார் ஜானகி அம்மையார் தான். அவர்களது திருமணம் பதிவு செய்யப்பட்ட திருமணம்.

### நவீன சூர்ப்பனகை

ராமாயணத்தில் ராமச்சந்திரன்மீது சூர்ப்பனகை ஆசைவைத்தாள். அப்படி யாரும் இங்கு ஆசை வைக்க முடியாது.

கட்சியை விட்டு நீக்கட்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். நாங்கள் நீக்க மாட்டோம், 4ந் தேதி புரட்சித் தலைவர் வருகிறார். பிறகு கட்சிவிஷயங்களை அவரிடம் சொல்வோம். அவர் நடவடிக்கை எடுப்பார்.

இவ்வாறுபொதுச் செயலாளர்ப,உ.ச.பேசினார்.

### ஜானகித்தாயை பழித்ததால் தமிழகம் குமுறுகிறது

செங்கல்பட்டு மாவட்டக் கழக செயலாளர் ஜே. சி. டி. பிரபாகரன் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

புரட்சித்தலைவர் புத்துயிர் பெற்று தமிழகம் திரும்பும் நாளை ஆனந்தக் கண்ணீரோடு நாடே எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் நேரத்தில் மாநிலங்களவை உறுப்பினர் ஜெயலலிதா அளித்துள்ள பேட்டிகள் அதிர்ச்சி அளிப்பதாகவும் அரசியல் நாகரிகத்தின் எல்லையை மீறியதாகவும் பொறுப்பற்றதாகவும் இருப்பது கண்டிக்கத்தக்கது.

கருத்து வேறுபாடுகள் மனமாச்சரியங்கள் இருப்பின் புரட்சித்தலைவர் வரும் வரை பொறுத்திருந்து அவர் எடுக்கும் முடிவுக்கு கட்டுப்படுவதுதான் மாநிலங்களவை உறுப்பினர் பதவியை அளித்து உயர்த்திய அவருக்கு செய்யும் நன்றிக் கடனாக இருக்கமுடியும்.

### ஆணிவேரை தகர்ப்பதா?

மாறாக இவரோ கழக கட்டுக் கோப்பின் அடித்தளத்தை- ஆணிவேரை தகர்க்க முயற்சிப்பதும், மூத்த தலைவர்களை முறையற்ற வார்த்தைகளைச் சொல்லித் தாக்குவதும் எல்லாவற்றுக்கும் மேலாக நாம் வணங்கும் ஜானகித்தாயை மனிதாபிமானமற்ற முறையில் விமர்சித்துப் பேட்டி அளிப்பதும் எந்த கழகத் தொண்டராலும்சகித்துக் கொள்ள முடியாதவை.

### யாருக்கு சவால்?

ஜானகித்தாயை அவமானப்படுத்துவதும், சுடுசொற்களால் அவரைச் சீண்டுவதும், தங்களது பிரார்த்தனை மூலம் புரட்சித் தலைவரை வாழவைத்து பேராதரவின் மூலமாக அவரை ஆளவைத்திருக்கிற தமிழகமக்களை சவாலுக்கு அழைப்பதாகும்.

கழகம் என்ன எம். ஜி. ஆரின் சொத்தா என்று இவர்கேட்கிறார். புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர், தான் கழகம், கழகம்தான் புரட்சித்தலைவர். இது தான் நாங்கள் கற்ற பாடம். இதை அந்த அம்மையார் தெரிந்து கொள்ள வேண்டும்.

புரட்சித் தலைவரின் போர்ப்படையில் எந்த தியாகமும் செய்திட அணிவகுத்து நிற்கும் லட்சோப லட்சம் தொண்டர்களின் இந்த உள்ளக் குமுறல் அரசியல் பயணத்தில் இவர் எடுத்து வைத்துள்ள ஆபத்தான படிகளைத் தடுத்து நிறுத்தும்.

இவ்வாறு ஜே. சி. டி பிரபாகரன் தெரிவித்துள்ளார்.

பகவான் மகாவீர் அகிம்சா பிரச்சார சங்கத்தின் சார்பில் சென்னையில் நடந்த விழாவில் "அகிம்சை" பற்றிய சிறப்பிதழை அமைச்சர் யூசுப் வெளியிட்டார். ரதன் சந்த்ஜி சோர்டியா முதல் இதழைப் பெற்றுக் கொண்டார்.

பொள்ளாச்சியில்

### வீரவணக்கநாள் பொதுக்கூட்டம்

பொள்ளாச்சி, பிப். 2- பொள்ளாச்சியில்பார்க்திடலில் சி. என். ராமமூர்த்தி தலைமையில் வீரவணக்கநாள் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்தில்பா. வளர்மதிஎம்.எல்.ஏ.வெங்கடாசலம், வ. ஜெயராமன், லிங்கராசு, உசேன், சிவலிங்கம், ரவீந்திரன், சர்தார், பார்த்தசாரதி, சாகுல்அமீது, ராஜன், ராமசாமி, சாலுத்தீன் மற்றும் பலர் உரையாற்றினர்.

### செங்கைமாவட்ட கலெக்டராக மாத்யூ நியமனம்

சென்னை, பிப். 2- செங்கல்பட்டு மாவட்ட கலெக்டராக கே. ஏ.மாத்யூ நியமிக்கப்பட்டுள்ளார்.

இதுவரை செங்கல்பட்டு கலெக்டராக இருந்த டி. ஆர். சீனிவாசன் வேலை வாய்ப்புமற்றும் பயிற்சித்துறை இயக்குநராக நியமிக்கப்பட்டுள்ளார்.

புதுக்கோட்டை மாவட்டத்துக்கு புதிய ஆட்சித் தலைவராக பிரிஜேசுவர் சிங் நியமிக்கப்பட்டுள்ளார்.

தாம்பரம் அருகே

### [illegible] கலைவிழா

சென்னை பிப். 2 தாம்பரத்தை அடுத்த பீர்க்கங்கரணை அண்ணா திடலில், குடும்ப நலத்துறையும், ஸ்டாண்டர்டுமோட்டார் நிறுவனமும் இணைந்து நடத்தும் தேசிய குடும்பநல 'இருவார விழா, மற்றும்குடும்ப நலகிராமியக் கலைவிழாக்களின் தொடக்க விழா நடைபெற்றது. விழாவுக்கு இயக்குநர் து.முருகராஜ் தலைமை வகித்தார் மாவட்ட ஆட்சி தலைவர் டி. ஆர். சீனிவாசன் முன்னிலை வகித்தார்.

குடும்ப நலக்கிராமியக் கலை விழாவைத் தொடக்கிவைத்து தமிழக பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் எம். ஆர். கோவேந்தன் உறையாற்றினார்.

அமைச்சர் எஸ். என். இராஜேந்திரன் கலந்து கொண்டு இருவார விழாவை தொடக்கிவைத்தார்.

விவசாய உயர் மட்டக் குழுத்தலைவர் முனுஆதி, சட்டமன்ற உறுப்பினர் எல்ல. இராசமாணிக்கம் மற்றும் பலர் கலந்து கொண்டனர். குடும்ப நலத்துறைதுணை இயக்குநர் கோ. இராதாகிருஷ்ணன் வரவேற்றார். மாவட்ட மக்கள் கல்வி தகவல் அலுவவர் எஸ். அப்பர் சுந்தரம் நன்றி கூறினார்.

### கழகத்தில் இணைந்த கம்யூனிஸ்டுகள்

மன்னார்குடி, பிப். 2- கூத்தாநல்லூர் பஞ்சாயத்தைச் சேர்ந்த மரக்கடை, ஔவை காலனி முதலிய பகுதிகளைச் சேர்ந்த என். ராமன், கணேசன் மகாலிங்கம், ஆகியோர் தலைமையில் 200 கம்யூனிஸ்டுகள் அந்த கட்சியிலிருந்து விலகி கழகத்தில் இணைந்தனர். மன்னார்குடி தொகுதி கழக எம்.எல்.ஏ.ஞானசுந்தரம் முன்னிலையில் அவர்கள் கழகத்தில் சேர்ந்தனர்.

### திருமணம்

வடசென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் ஏ. வி. என். அங்குசாமியின்மாமாஅம்மாபட்டி கருப்பஞ் செட்டியார் மகன் அங்கண்ணனுக்கும், அங்காளீஸ்வரி என்னும் தேன்மொழிக்கும் வரும் 3ந்தேதி காலை 9-மணிக்கு திருமணம் நடைபெறுகிறது.

சென்னை பழைய வண்ணாரப்பேட்டை எஸ். என். சுப்பையா செட்டியார் திருமண மண்டபத்தில்அமைச்சர்ஆர்.எம்.வீ. தலைமையில் இயக்குனர் பாக்யராஜ், முசிறிப் புத்தன் எம். எல். ஏ. ஆகியோர்முன்னிலையில் மண விழா நடைபெறுகிறது.

7ம் பத்தி தொடர்ச்சி

தலைமையில், நடைபெற்ற இந்தக் கூட்டத்தில் ஒன்றிய கழக பொறுப்பாளர்கள், சார்பு மன்றத் தோழர்கள் மகளிர், தொழிற்சங்க பிரிவினர் அனைவரும் கலந்து கொண்டனர் என ஒன்றிய அவைத்தலைவர் பொறுப்பில் இருக்கும் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி தெரிவிக்கிறார்.

## தேர்தல் களம்

### புதுவையில் இந்திராகாங்கிரஸ் தேர்தல் குழு

புதுடெல்லி. பிப், 2- புதுவை மாநிலசட்டசபைத் தேர்தலை முன்னிட்டு மாநில இந்திராகாங்கிரஸ் தலைவர் பி. சண்முகம் தலைமையில் இந்திரா காங்கிரஸ் தேர்தல் குழு அமைக்கப்பட்டுள்ளது.

இக்குழுவில் இளைஞர் காங்கிரஸ் தலைவர் பி.கண்ணன், முன்னாள் சபாநாயகர் பரூக் ஆகியோர் உள்ளனர்.

இந்தகுழுவுக்குஇந்திரா காங்கிரஸ் தலைவர் ராஜீவ்காந்தி ஒப்புதல் அளித்துள்ளதாக அக்கட்சியின் பொதுச்செயலாளர் மூப்பனார் தெரிவித்துள்ளார்.

புதுவை, கர்நாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலங்கள் உட்பட 12 மாநிலங்களில் நடைபெற உள்ள சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட வேட்பு மனு தாக்கல் தொடங்கியது.

வெள்ளிக்கிழமை மட்டும் 600க்கும் மேற்பட்டவர்கள் வேட்புமனு தாக்கல் செய்துள்ளனர்.

உத்திரப் பிரதேசத்தில் 400 பேரும், பீகாரில் 200 பேரும், மத்தியப்பிரதேசத்தில் 250 பேரும் வேட்பு மனு தாக்கல் செய்துள்ளனர்.

புதுவையில் சுயேச்சைகள் சிலர் வேட்பு மனு தாக்கல் செய்துள்ளனர்.

### கர்நாடகம்

கர்நாடகத்தில் துவக்க நாளான்று மட்டும் 35 தொகுதிகளுக்கு 55 பேர் வேட்பு மனு அளித்தனர்.

சபாநாயகர் சந்திர கவுடா தீர்த்தஹள்ளி தொகுதியில் போட்டியிட வேட்புமனு தாக்கல் செய்தார்.

### ஆந்திரா

ஆந்திரமாநிலத்தில் சட்டசபைத்தேர்தலில் போட்டியிட 8 அமைச்சர்கள் அடங்கிய 24 பேர் கொண்ட முதல் பட்டியலை தெலுங்கு தேச கட்சித்தலைவர் என். டி. ராமராவ் வெளியிட்டார்,

பின்னர் 2 பட்டியல் வெளியிடப்படும் என்று என் டி. ராமராவ் கூறினார்.

### பிப்ரவரி 8 கடைசி நாள்

ஆந்திரா, புதுவை, கர்நாடகம், குஜராத், ஒரிசா இமாசலப் பிரதேசம், ராஜஸ்தான், சிக்கிம் ஆகிய மாநிலங்களில் வேட்பு மனு தாக்கல் செய்ய கடைசி நாள் பிப்ரவரி 8-ந்தேதி,

மனுக்களை வாபஸ் பெற கடைசி நாள் பிப்ரவரி 11ந்தேதியாகும்.

திருப்பெரும்புதூர்

### ஒன்றியக்கழக ஆலோசனைக் கூட்டம்

செங்கல்பட்டு, பிப். 2- செங்கை மாவட்டம் திருப்பெரும்புதூர் ஒன்றிய கழகசெயல்வீரர்கள்ஆலோசனைக்கூட்டம் திருப்பெரும்புதூரில் ஒன்றிய கழக அ[illegible] கத்தில் நடைபெற்ற[illegible] டி. பி. கோவிந்த[illegible]

5 ம பததி பாாகக

### ஏல விற்பனை

(1) D. B. Madanlal sowcar, No. 250, Paper Mills Road, Madras-11. (1-3-83 முதல் 31-12-83வரை) ஏலத்தேதி 15-2-85 அன்று மதியம் 1 மணிக்கும்,

(2) B. Sunder Dev & Co No. 62. P. M. Road, Perambur Madras - 11 (1-10-82 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 15-2-83 அன்று மதியம் 2 மணிக்கும்,

(3) Budhraj Jain, No.11 S. R. P. Koil Street (North) Peravallur, Ms. 82 (1-2-83 முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 15-2-85 அன்று மதியம் 3 மணிக்கும்,

(4) Nemi Chand Jain, 93, Madhavaram High Road, Perambur, Ms. 11 (1-8-83 முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 25-2-85 அன்று காலை 10மணிக்கும்,

5) R.Devaraj Sowcar, 84 Ramamurthi Colony, Thiru, vi.ka.Nagar,Perambur, Ms. 82 (25.8.82 முதல்31.12.85 வரை) ஏலத்தேதி 25. 2. 83 அன்று பகல் 12 மணிக்கும்,

(6) SuriyakanthiJain No. 14 OthavadaiSt, Nammawa Pet,ms.12, (1.11.82 முதல் 30.4.83) வரை ஏலத்தேதி 25. 2. 85 அன்று மதியம் 1 மணிக்கும்,

7. S. Chand mad Jain 154, P.T.H,Road Ms 12 (1-7-83 முதல் 30-11-83 வரை) ஏலத்தேதி 25-2-85 அன்று மதியம் 2 மணிக்கும்

8. Prakash Kumar, No. 8, Puliantnohe High Road Madras-12 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 25-2-85 அன்று மதியம் 3 மணிக்கும்,

9. S. Thanikachalam Chettiar No. 1 Gnanambal Garden St, Ayanavaram Madras-23, (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் 30-10-83 வரை) அறிவிக்கப்பட்ட ஏலதேதி 23-1-85 மாற்றப்பட்டுள்ள ஏலத் தேதி 28-2-85 அன்று பகல் 12-மணிக்கும்,

10. A.SampathRaj Kothari 1-2 Kalmandapam Road. Royayuram, Madras-13 (1-7-83 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 28-2-85 அன்று காலை 10மணிக்கும்,

11) M.Abhay Raj Kothari. 1-2 East Kalmandapam Road, Royapuram Ms-13 (1-9-82 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 28-2-85 அன்று பகல் 11 மணிக்கும்,

12) R. G. Saama, No. 14, Gajapathi St., Shenoy Nagar, Ms., 30. (1-9-83 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 28-2-85 அன்று மதியம் 12மணிக்கும்,

13) G. Ramlal, No. 8-2 Mittal Chamber Road, Arumbakkam, Ms., 106. (31-8-82 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 28-2-85 அன்று மதியம் 1 மணிக்கும்,

14. L. Shantilal Pokarana, 90. Namachivayapuram Ms. 94, (1-9-82 முதல் 31-12-83 வரை)ஏலத்தேதி 28-2-85 அன்று மதியம் 2-மணிக்கும்,

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள, பொன் பொன் அல்லாதப் பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம் சந்த் ஜெயின் 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதியில் ஏலம் போடுவார்.

மேல்மலையனூரில்

## பொதுச் செயலாளர் ப. உ. ச. நன்றிஅறிவிப்பு

கட்லூர், பிப். 2- மேல் மலையனூர் தொகுதியில் கழகப்பொதுச்செயலாளர் ப. உ. ச. சுற்றுப் பயணம் செய்து வாக்காளர்களுக்கு நன்றி கூறினார்.

முதல் நாள் மாதப் பூண்டி, நாகலாம்பட்டு, நல்லாண் பிள்ளை பெற்றாள் உள்பட 30 கிராமங்களுக்கும், 2வது நாள் 15 கிராமங்களுக்கும், 3 வது நாள் 15 கிராமங்களுக்கும் சென்று வாக்காளர்களுக்கு நன்றிகூறினார்

அவருக்கு பல கிராமங்களில் மேள-தாளத்துடன் வரவேற்பு அளிக்கப் பட்டது. பெண்கள் ஆரத்தி எடுத்து வரவேற்றார்கள், ஆலம்பூண்டி என்ற ஊரில் அவரை அலங்கார ரதத்தில் உட்கார வைத்து ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள்.

கிரிக்கெட்வீரர்:

## அசாருதீன் உலக சாதனை ஜனாதிபதி பிரதமர் வாழ்த்து

புதுடெல்லி, பிப். 2— உலகிலேயே டெஸ்ட் பந்தயங்களில்தொடர்ந்து 3 சதம் போட்ட இந்திய கிரிக்கெட் வீரர் முகமது அசாருதீன் ஒருவர் தான்

இந்தியா - இங்கிலாந்து இடையே நடைபெறும் மூன்றாவது டெஸ்ட் பந்தயம் கான்பூரில் நடைபெறுகிறது.

கான்பூர் பந்தயத்தில் இந்திய வீரர் அசாருதீன் 3-வது சதத்தைப் போட்டார்.

இதற்காக 21 வயது இளைஞரான முகமது அசாருதீனுக்குஜனாதிபதி ஜைல்சிங்கும் பிரதமர் ராஜீவ்காந்தியும்பாராட்டும் வாழ்த்தும் தெரிவித்துள்ளனர்.

## மு. ஒலியின் புளுகுச் செய்தி: கழக தோழர்கள் மறுப்பு

சென்னை, பிப். 2- பெரம்பூர் பகுதி 45-வது வட்டத்தில் தி. மு. க வினரை கழகத்தவர் தாக்கியதாக மு. ஒலி ஒரு பொய்ச் செய்தி வெளியிட்டிருக்கிறது,

இந்தச் செய்தியை 45,வது வட்ட கழகத் தோழர்கள் வன்மையாகக் கண்டித்துள்ளனர். கள்ள ஓட்டுப் போட முயன்ற தி.மு.க.வினரை தட்டிக் கேட்ட கழகத் தோழர்கள் ஆறுமுகம், அந்தோணி ஆகியோரை தி.மு.க.வினர் தாக்கிவிட்டு போலீசிலும் புகார் செய்தனர்.

காவல்துறை இரு தரப்பினரையும், அமைதியாக இருங்கள் என்று சமரசப் படுத்தினர். உண்மை இவ்வாறிருக்க தி மு. க. வினரை கழகத் தோழர்கள் தாக்கியதாக மு. ஒலி ஏடு பொய்ச்செய்தி வெளியிட்டிருப்பது கண்டிக்கத்தக்கது என்றும் தெரிவித்துள்ளனர்.

அமெரிக்காவாழ் தமிழர்கள் தந்த அருமையான வரவேற்பு வீடியோ:

# புதுபொலிவோடு புரட்சிதலைவர்: புல்லரிக்கும் விழா நிகழ்ச்சிகள்

மருத்துவ உலகமே வியக்கும் வகையில் - மானிட வர்க்கமே பாராட்டும் விதத்தில் புரட்சித்தலைவர் மூன்றாவது பிறவி எடுத்துள்ளார்.

''காலா-வாடா உனைக் காலால் உதைக்கிறேன்'' என்று காலனை பாரதி சாடிப்பாடினார்.

பாரதியின் அந்த பாட்டிற்கு முதல்வர் புரட்சித் தலைவர்பொருள் கூறி புவிக்குக் காட்டிவிட்டார்.

அன்று துளைத்தது குண்டு, அதிலிருந்து மீண்டார். இன்று வந்தது நோய். அதையும் புறங்கட்டி பொலிவோடு காட்சியளிக்கிறார்.

புரட்சித் தலைவருக்கு வந்த நோய் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு புற முதுகிட்டு விட்டது. புன்முறுவலோடு மீண்டும் ஒருபிறவி எடுத்து விட்டார்.

மருத்துவர்கள் வியக்கின்றனர்! மானிடர் புகழ்கின்றனர். போற்றுகின்றனர்.

மூன்றாவது பிறவி எடுத்து முழுப்பொலிவோடு இருக்கும் முழுமதியாம் புரட்சித்தலைவரை கண்டுகளிக்கும் பாக்கியம் முதன் முதலில் அமெரிக்காவாழ் தமிழ் மக்களுக்கு கிடைத்துள்ளது.

முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம் குன்றி வந்தார்; உடல்நலம் முற்றும் சரியாகி முதல்வராக அமெரிக்க மண்ணில் இருந்து புறப்டுகிறார்.

தமிழ் மக்களின் காவல் தெய்வம். தமிழர்களின் ஒப்பற்ற தலைவன் புரட்சித்தலைவருக்கு அமெரிக்காவாழ் தமிழ்மக்கள் பாராட்டு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தனர்.

அமெரிக்காவில் உள்ள பல்வேறு தமிழ்சங்கங்கள் தமிழறிஞர்கள் சார்பில் இந்த பாராட்டு விழா நடைபெற்றது.

அந்த உணர்ச்சிமிக்க நிகழ்ச்சி வீடியோ படமாக எடுக்கப்பட்டுள்ளது.

அந்த் வண்ணப்படம் நேற்று தலைமைச் செயலகத்தில் நிருபர்களுக்கு காண்பிக்கப்பட்டது.

இதோ அந்த உணர்ச்சி ஓவியம்......!

விண்ணை முட்டும் அழகுமிகு அடுக்கு மாடங்கள் கொண்ட வீடுகள்

அதனிடையே கம்பீரமாக நிற்கும் புரூக்ளின் மருத்துவமனை அதன் அரங்கில் வரவேற்பு நிகழ்ச்சி.

தமிழர்கள்ஆண்களும் பெண்களும் வந்து குவிகின்றனர். அரங்கம் திணறுகிறது. அமெரிக்க தமிழர்கள் அனைவருமே அங்கு வந்து திரண்ட அரிய காட்சி, விழா தொடங்குகிறது. விழா அரங்கில் ஆயிரம் நிலவின் அழகு முகம் பளிச்சிடுகிறது.

முதல்வர் புரட்சித் தலைவரது இடப் பக்கம் முதல்வரது துணைவியார் ஜானகி அம்மையார் அமர்ந்துள்ளார்.

தமிழ்நாட்டில் நாம் பார்த்துப் பார்த்துப் பரவசப்பட்ட அதே எம். ஜி. ஆர்,

சந்தன நிற முழுக்கை சட்டை இரு வண்ணக்கரை வேட்டி-வலக் கை மணிக்கட்டில் அதே கைக் கெடிகாரம். தோளில் சால்வை தலையில் அதே வெள்ளைத் தொப்பி. வழக்கம்போல கறுப்புக்கண்ணாடி.

புத்துயிர் பெற்ற புரட்சித்தலைவர் புன்னகை புரிகிறார். உள்ளமெல்லாம் பூரிக்கிறது. உடலெல்லாம் புல்லரிக்கிறது. அரங்கே உணர்ச்சி வெள்ளத்தில் மிதக்கிறது.

தமிழ்நாட்டில் நடக்கும் ஒரு விழாவில் பங்கேற்பது போல புரட்சித்தலைவர் புன்னகைக்கிறார். வழக்கம் போல முகபாவம். உணர்ச்சிகள் அலை அலையாக காட்சியளிக்கின்றன.

உட்கார்ந்து இருந்தவர்எழுந்து இரு கைகளாலும் தனது நாற்காலியைப்பின்தள்ளிசரியாகநகர்த்தி விட்டு மீண்டும் உட்காருகிறார்.

வரவேற்பு விழாவில் உரைகள் ஆங்கிலத்திலும், தமிழிலும் மாறி மாறிப் பலர் பேசுகின்றனர்.

உரையைக் கேட்கிறார். அதற்கிடையே வலது கையால் தனது தொப்பியை சரிசெய்துகொள்கிறார்.

வலது கையில் ர்சீப் இருக்கிறது.

தனக்குப் போடும் மாலைகளை இருகரங்களாலும் தொப்பி கலையாமல் தூக்கி கழற்றுகிறார்.

மலர்ச் செண்டுகளை இருகரங்களால் வாங்கி வைக்கிறார்.

மேஜை மீது சிதறிய பூவிதழ்களை வலதுகைவிரல்களால் திரட்டுகிறார்.

பேச்சுக்கிடையே ஒரு தமிழ்ப்பெண்மணி தம்பூரா சுதியோடு புரட்சித் தலைவரை வாழ்த்தி இனிய குரலில் பாடுகிறார். அந்தப் பாட்டுக்கு ஏற்பதனது தலையை அசைத்து ரசிக்கிறார்.

''மூன்றெழுத்தில் தோன்றி,மூவுலகம் போற்றும் மூவேந்தர் ஆட்சியை நடத்தும் நாயகன் வாழ்கவ்வ என்று பாடல் துவங்குகிறது.

பொன்மனச் செம்மலே... புரட்சித் தலைவரே... மக்கள் திலகமே... உனக்கா இப்படி ஒரு சோதனை வந்ததுஎன்று பாடலில் உருக்கம் இழைகிறது.

ஜானகி அம்மையார் உணர்ச்சி வசப்பட்டுகண்ணீர் விடுகிறார்,

கண்ணாடியைக் கழற்றி கைக்குட்டையால் கண்ணைத் துடைத்துக் கொள்கிறார்.

இதைக்கண்ட புரட்சித்தலைவர் துணைவியாரின் இடதுகையைத் தட்டி அமைதிப்படுத்துகிறார்.

உணர்ச்சியின் உச்சக்கட்டத்தில் புரட்சித்தலைவரைப் பற்றி புகழ்ந்துபாடிய அந்தப் பெண் உணர்ச்சியை அடக்க முடியாமல் அழத் தொடங்குகிறார். புரட்சித் தலைவரது முகம் பரிதாபப்படுகிறது.

மீண்டும் பாராட்டுரை தொடர்கிறது,

பாரதி தமிழ்சங்கத் தலைவர் அய்யாதுரை பேசுகிறார், பேசி முடிக்கு முன்பு முதல்வருக்குப் பிடித்த பாடல் ஒன்றைப் பாடப்போகிறேன் என்கிறார்.

உடனே முதல்வர் புரட்சித்தலைவர் அவரைக் கூர்ந்துபார்க் றார். அய்யாதுரைஉடனே ''நீராறும் கடலுடுத்த'' என்ற பாட்டைப் படிக்கிறார்.

அதை ஆமோதிக்கும் விதத்தில் முதல்வர் தலையை அசைக்கிறார்.

அமெரிக்க கோயில் ஒன்றில் இருந்து வந்த் அர்ச்சகர் ஒருவர் சமஸ்கிருதஸ்லோகம் சொல்கிறார்.

நீண்ட ஆயுளோடு வாழ வாழ்த்தும் சுலோகத்தை முடித்து விட்டு முதல்வரது நெற்றியில் பிரசாதத்தை இட்டு விடுகிறார்.

ஆலய பிரசாத த்ட்டை முதல்வரிடம் அர்ச்சகர் தருகிறார். இரு கரங்களாலும் அதைப் பெற்றுக் கொள்கிறார் முதல்வர்.

பூச்செண்டுகளை குழந்தைகள் தருகின்றன. குழந்தையின் கன்னத்தைத்தட்டுகிறார் முதல்வர்.

தமிழக நடிகை பத்மினியும் கோயில் பிரசாதம் கொடுக்கிறார். அதைப் பெற்றுக்கொள்கிறார்.

முதல்வரிடம் பத்மினி ஆசிபெற குனியும்போது இருகரங்களாலும் தடுக்கிறார்.

இப்படிப் பல அற்புதக்காட்சிகள். கண்கள் பனிக்கின்றன. நெஞ்சம்இனிக்கிறது.

புரட்சித் தலைவர் உடல்நலம் பற்றிப் புழுதிவாரி தூற்றித் திரியும் புல்லர்கள் இதைக்காணவேண்டும்.

உண்மை உயர்ந்து நிற்கிறது. பொய்மைப் புறமுதுகிடுகிறது.

- வீ. அரங்கநாதன்

# மகிழ்ச்சியுடன் சென்னைக்கு திரும்புகிறோம்

முதல்வரின் தனிமருத்துவர் பேட்டி

நியூயார்க், பிப். 2 துயரத்துடன் அமெரிக்கா வந்தோம், மகிழ்ச்சியுடன் சென்னை திரும்புகிறோம் என முதல்வரின் தனி மருத்துவர் பி ஆர். சுப்பிரமணியம் கூறினார்.

முதல்வருடன் அமெரிக்கா சென்ற அவரது தனி மருத்துவர் பி. ஆர். சுப்பிரமணியம் சென்னைக்கு திரும்புவது பற்றி நியூயார்க்கில் கூறியதாவது:-

சென்னைக்கு புறப்படுவதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டுள்ளோம்.

நாங்கள் அமெரிக்காவுக்கு வந்தபோது துயரத்துடன் வந்தோம். இப்போது மகிழ்ச்சியுடன் சென்னை திரும்புகிறோம் முதல்வர் புரட்சித்தலைவர் நன்றாக குணம் அடைந்துள்ளார்,

இவ்வாறு பி. ஆர். சுப்பிரமணியம் கூறினார்.

முதல்வரின் தனிச் செயலாளர் பரமசிவம் நிருபர்களிடம் பேசுகையில் முதலமைச்சர் எம். ஜி. ஆர். பதவி ஏற்கும் தேதி இன்னும் முடிவாகவில்லை. 7 அல்லது 10-ந் தேதி பதவி ஏற்கலாம் என்று தெரிவித்தார்.

# இந்த நூல்- காக்கப்பட வேண்டிய காலப்பெட்டகம்

நூல் நயம்

''பாடுவோம் திராவிடப்பண்''

(நூல் தொகுப்பு:- சிந்தனையாளர் பதிப்பகம்.

விலை: ரூ. 6

கிடைக்குமிடம்:- திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் சென்னை மற்றும் அதன் கிளைகள். பூங்கொடி பதிப்பகம் மயிலாப்பூர். சென்னை-4)

நாளேடுகளில் அமைச்சர் காளிமுத்து பல்வேறு தலைப்புகளில் எழுதியவற்றில் சிலவற்றைத் தொகுத்து சிந்தனையாளர் பதிப்பகத்தார் ''பாடுவோம் திராவிடப்பண்'' என்ற பெயரில் நூலாக வெளியிட்டுள்ளனர்.

''அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் கூடிக் கலையும் காக்கை கூட்டமல்ல; கூடிப் பொழியும் மேகக் கூட்டம் என்பதை மாற்றார்களுக்கு கொள்கை முரசு கொட்டி அறிவிக்கப் பாடுவோம் திராவிடப் பண்!'' இப்படி பதிப்புரை வழங்கி திராவிட இயக்கக் கருத்துக்கள் மக்களிடம் பரவதாங்கள் உறுதுணையாய் இருப்போம் என்றுபறைசாற்றுகின்றனர் சிந்தனையாளர் பதிப்பகத்தார். அவர் தம் பணிநீடுழி வாழ நம் வாழ்த்துக்கள்.

இந்த நூலில் தெற்கு விழிக்கிறது என்ற தலைப்பில் ஆந்திராவில் திராவிட சிந்தனை படர்ந்த ராமராவ் ஆட்சிக்கு வந்ததை அழகாக அமைச்சர் காளிமுத்து படம் பிடித்துக் காட்டியிருப்பதோடு திராவிட இயக்கத்தின் நோக்கத்தையும் கொள்கையையும் தனக்கே உரித்தான அழகு தமிழில் தெளிவாக கூறியிருக்கிறார்.

ஆதிக்கஇந்தியைஎதிர்த்துக் குரல் கொடுத்து தங்களது தேக்குமரத் தேகங்களை தீக்கிரையாக்கிய தியாகச் செம்மல்களைப் பட்டியல் போட்டுக்காண்பித்துத் தமிழன் பெருமையை உணர்த்தவும் எந்த வடிவில் வந்தாலும் இந்தியை எதிர்க்க கழகம் தயங்காது என்பதையும் உறுதியாக எடுத்துக் கூறி இருக்கிறார்.

கடையடைப்பு என்ற பெயரில் கருணாநிதி கும்பல் நடத்தியபோராட்டங்களை எடுத்துக்கூறி கட்சித்தலைவரான கருணாநிதி வர்த்தகசபை தலைவரான கதையையும் தனக்கே உரித்தான நடையில் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

முதலாளித்துவத்துக்கு எதிராக தனது குரலை உயர்த்திசமூகசீர்திருத்தம், பொருளாதார புனரமைப்பு, அரசியல் உரிமை இந்த மூன்று பணிகளையும் புரட்சித்தலைவர் நிறைவேற்றிவரும் பாங்கினையும் நன்கு சித்தரித்துள்ளார். ஈழத்தமிழர்களின் வாழ்வுக்கும் குரல் கொடுக்க மறுக்கவில்லை.

அமைச்சர் காளிமுத்துவின் சிந்தனைப் பூங்காவில் பூத்திடும் கனிமொழியாயினும், கனல் மொழியாயினும் அதற்கென்று வரலாறும், பாரம்பரியமும் உண்டு.

இயற்கை சீற்றங்களினால் ஒருவேளை தமிழகம் அழிந்துபடினும் அண்ணாவின் கருத்துக்களைக் கொண்டே புதிய தமிழகத்தை, பொலிவு மிக்க தமிழகத்தை உருவாக்கி விடலாம் என்பார் அமைச்சர் கா. காளிமுத்து.

அண்ணாவின் கருத்துக்கள் காலவெள்ளத்தால் அழியாதவை. அந்த அண்ணனின் கருத்துக்களை நூல்கள்வாயிலாகக் கற்றும், அத்துடன் புதுமைச் சிந்தனை படைத்த பல வல்லுனர்களின் கருத்துக்களைக் கேட்டும் தனக்கே உரிய நடையில் அமைச்சர் காளிமுத்து பேனா முனையிலிருந்து வரும்சொற்களும், நாவிலிருந்து உதிக்கும் வார்த்தைகளும் காப்பாற்றப் பட வேண்டிய காலப் பெட்டகங்கள் அந்தவகையில் இந்த நூலும் ஒரு காலப்பெட்டகம்.

- பாலுமணி

## தினகரன் புகாருக்கு சுலோசனா சம்பத் பதிலடி

சென்னை. பிப், 2- தமிழ்நாடு பாடநூல் நிறுவன மேலாண்மை இயக்குனர் சுலோசனா சம்பத் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

''தினகரன்'' நாளேட்டில் கடந்த 29-ந் தேதி வாசகர் கடிதம் என்னும் பகுதியில் 7 ஆம் வகுப்பு வரலாற்றுப் பாடநூல் பற்றிக் கூறப்பட்டிருக்கும் குற்றச்சாட்டுக்குக் கீழ்க் காணும் விளக்கம் அளிக்கப்படுகிறது.

எல்லாப் பாட நூல்களும் அரசின் பாடத் திட்டத்துக்கு இணங்கத் தயாரிக்கப்படுகின்றன. 7 ஆம் வகுப்பு வரலாற்றுப் பாடத் திட்டத்தில்'' திராவிட நாகரிகம்'' என்னும் தலைப்பு இடம் பெறவில்லை. எனவே தான், 7ஆம் வகுப்பு வரலாற்றுப் பாட நூலில் திராவிட நாகரீகம் பற்றிப் பாடம் இல்லை.

இந்த வேளையில் 4, 5, 6. மற்றும் 10ஆகியவகுப்புகளுக்கான பாடத்திட்டத்தில் திராவிட நாகரிகம் இடம் பெற்றிருப்பதால் அந்த நான்கு பாடநூல்களிலும் திராவிட நாக

5-ம பத்தி பாரக்க

## வீரவணக்க நாள் கூட்டம்

சேலம், பிப். 2- சேலம்மாவட்டம் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் சார்பில் வீர வணக்க நாள் கூட்டம் எலச்சி பாளையத்தில் மாணவ அமைப்பாளர் நடேசன் தலைமையில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி. என். செல்வம் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். சந்திரன் .மனோகரன், சுப்பிரமணியம், பன்னீர்செல்வம், ஆறுமுகம், ராமன், தினகரன், ராமசாமி, தங்கவேலு, பழனிசாமி, சுப்பிரமணியம், முத்துசாமி, புரட்சி முத்துசாமி, சக்திவேல், குமரவேல் மற்றும் தொகுதி மாவட்ட பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

## மதுரையில் ஊனமுற்றோருக்கு மூன்று சக்கர வண்டிகள்

மதுரை, பிப். 2- மதுரை மாவட்டத்தில் 1984-85 ஆம் ஆண்டிற்கு உடல் ஊனமுற்றவர்களுக்கு 95 மூன்று சக்கர வண்டிகள் சென்னைசமூக நல இயக்குநரால் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளனஎன்று மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர் வரதராஜுலு ஓர் அறிக்கையில் கூறியுள்ளார்அவர் கூறியதாவது:-

1982-83 மற்றும்83-84ம் ஆண்டுகளில் தேர்ந்தெடுக்கப்பட்டு அவ்விரண்டு ஒதுக்கீடு அளவிற்கு வழங்கிய போது எஞ்சிய51நபர்களுக்கும் 84-85ம் ஆண்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட 38 நபர்களுக்கும் சேர்த்து மொத்தம் 89 நபர்களுக்கு மூன்று சக்கர வண்டிகள் வழங்கப்பட்டுள்ளன.

இவ்வாறு மாவட்ட ஆட்சித் தலைவர் ஆர். வரதராஜுலு தெரிவித்தார்.

## சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத் தோழர்களுக்கு...

பேரறிஞர் அண்ணாவின் நினைவு நாளான 3—2—85 ஞாயிறு காலை 8 மணி அளவில் கழக சார்பில் அமைதிப் பேரணி அண்ணாசாலையிலுள்ள அண்ணா சிலையிலிருந்து புறப்பட்டு அண்ணா நினைவாலயத்தைச் சென்றடைகிறது.

இந்த அமைதிப் பேரணியில் சென்னை மாவட்டத்தைச் சேர்ந்த மன்ற மறவர்களும், அனைத்துப் பிரிவினரும் தவறாது கலந்து கொள்ளவேண்டுகிறேன்.

-இ. ... நூதனன் எம். எல். சி.
மாவட்டச் செயலாளர்
சென்னை மாவட்ட
எம். ஜி. ஆர். மன்றம்

சென்னை-14,
2-2-85.



# சைதை வரலாறு படைக்கிறது: ஆர்.எம். வீ. கூட்டத்தில் புரட்சித்தலைவர் புதிய வீடியோ

சென்னை, பிப், 2- சென்னை சைதைத்தேரடி திடலில் இன்று மாலை 7 மணி அளவில் கழகப் பொதுக் கூட்டம்நடைபெறுகிறது.

அமெரிக்காவிலுள்ள தமிழ்ச்சங்கங்களின் சார்பாக முதல்வர்புரட்சித் தலைவருக்கு மாபெரும் வரவேற்பு நியூயார்க்கில் அளிக்கப்பட்டது.

நியூயார்க்கில் அளிக்கப் பட்டவரவேற்பின் வீடியோ படம் சைதை கூட்டத்தில் காட்டப்படுகிறது.

மாலை 6 மணிக்கு புரட்சித்தலைவரின் வீடியோ தொடங்குகிறது.

மே. சொ. மகாலிங்கம் தலைமையிலும். ஏ. துரை முன்னிலையிலும், மார்ட்டின் வரவேற்பிலும்நடைபெறும் இந்தக் கூட்டத்தில் அமைச்சர்ஆர். எம்.வீ. பங்கேற்று பேசுகிறார்.

ஜேப்பியார்எம். எல். சி. ... ஜெயந்திமாலாஎம்.பி. ... எம். எல். சி.

செ. தங்கராசு எம். எல். ஏ., தமிழ்செல்வன். டி. வி. தட்சிணாமூர்த்தி உள்ளிட்ட பலர் பேசுகின்றனர். சைதை துரைசாமி எம். எல். ஏ. நன்றி கூறுகிறார்.

நவரசம் ஜி. கே. எஸ். ராக்கெட் முத்துராஜா குழுவினரின்கலைநிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

6-ம் பத்தி தொடர்ச்சி

ரீகம் பற்றிய பாடங்கள் உள்ளன, இதுதான் உண்மை. இதிலே 'வேண்டுமென்றே' செய்யப்பட்ட சதிஎனதுவும் இல்லை.

எனவே, பாட நூலில் எந்த இருட்டடிப்பும் நடக்கவில்லை. இருட்டடிப்பு நடந்திருப்பதாகக் கூறப்பட்ட புகார் முற்றிலும் ஆதாரமற்றது

இவ்வாறு சுலோசனா சம்பத் தெரிவித்துள்ளார்.

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-600029